11th February 1958]

*National Extension Services and Community Development Projects*

* 34 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government have received any communication from the Centre regarding the postponement of the target date for bringing the entire State under the National Extension Services and Community Development Projects?

The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.

Sri N. K. PALANISAMI : உடனடியாக பின்தங்கிய, பிற்பட்ட பிரதேசங்களை இந்த கம்யூனிடி பிராஜெக்ட்ஸ் திட்டத்திற்குள் கொண்டு வர நடவடிக்கைகள் எடுத்து இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் ஏற்பாடு செய்வார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

The Hon. Sri C. SUBRAMANIAM : இப்போது இருக்கக்கூடிய திட்டத்தின் பிரகாரம், இந்த இரண்டாவது ஐந்தாண்டு திட்ட கால வரம்பிற்குள்ளாக எல்லா பகுதிகளையும் இந்த தேசிய அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் கொண்டுவரவேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் அபிப்பிராயம்.

Sri V. K. KOTHANDARAMAN : இந்த ராஜ்யம் முழுவதிலும் தேசிய, சமுதாய அபிவிருத்தித் திட்டங்களை எந்த ஆண்டுக்குள்ளாகக் கொண்டுவரப்படும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதை பற்றித்தான் இப்போது சொல்லிக்கொண்டிருந்தேன். இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் கால வரம்பிற்குள்ளாகக் கொண்டுவரவேண்டுமென்பது திட்டம்.

*Community Development Blocks*

* 35 *Q.*—Sri M. P. SUBRAMANIAM : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any proposal to bifurcate the existing Community Development Blocks at Athur and Peddanaickenpalayam in Salem district; and

(*b*) if so, when?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) & (*b*) The matter is under correspondence with the Government of India.

Sri M. P. SUBRAMANIAM : ஸார், சேலம் மாவட்டத்தில், ஆத்தூர், பெத்தநாயக்கன்பாளையம் இந்த இரண்டு சமுதாய அபிவிருத்தித் திட்ட பிளாக்குகளிலும் ஏறக்குறைய ஒன்றறை ஆண்டு காலம் பணம் இல்லாமல் எந்த வேலையும் செய்யப்படாமல் இருக்கிறது. சராசரி ஜனத்தொகை 75,000 உள்ளதற்குப் பதிலாக, இந்த இரண்டு பிளாக்குகளிலும் 150,000 ஜனத்தொகை உள்ள காரணத்தால் இவைகளை உடனடியாக எடுத்துக்கொள்ள என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : ஆகையால்தான், இந்த இரண்டு பகுதிகளையும் இரண்டு பிரிவுகளாகப் பிரிப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மத்திய சர்க்காரின் அனுமதிவேண்டும். அதற்கு எழுதப்பட்டிருக்கிறது.